புதுவை, கணபதிசெட்டிகுளம்
பஸ் ஸ்டாப்பிலிருந்து
100 மீட்டர் தூரம்
ECR ரோட்டிலிருந்து
20 அடி தூரத்தில் மதில்
சுவருடன் கேட் உள்பட சுமார்
22x70 அடி காலி மனை.
விலை 15 இலட்சம்.
தொடர்பு கொள்க.
நெ.4, ஸ்கூல் மெயின் வீதி,
கோவிந்த சாலை, புதுவை-11
செல்: 99448 11326
17/135

புதுவை,
அரும்பார்த்தபுரம்
V.I.P- நகரில்
30'x60' மனை
விற்பனைக்கு
உள்ளது.
புரோக்கர்கள்
தவிர்க்கவும்
தொடர்புக்கு
செல்: 90035 32043
17/171

புதுவை,
முதலியார்பேட்டை
ஆண்டியான்தோப்பு
வீதியில்
1000 ச.அடியில்
அமைந்துள்ள
திராவி போட்ட வீடு,
(மெட்ராஸ் டெரஸ்)
விற்பனைக்கு
உள்ளது. அணுகவும்
செல்: 99449 59175
17/172

1) அரியாங்குப்ப...
சின்ன வீராம்...
திருமால் நகரி...
20x60 அளவுள்ள மூன்...
சதுர அடி விலை...
தனித்தனியாகவு...
2) 30x60=1800 சதுர ...
காம்பவுன்ட் சிறிய ஷெட் ...
தார் சாலையில் ஸ்ரீந்...
அருகில் (Commerc...
Power கிடைக்கக்கூடிய ...
கிடைக்கும். தொடர்புக்கு செ...

...ட்மன் துணை நம்பிக்கை! நாணயம்!! கைராசி!!!

## ...மனைகள் விற்பனைக்கு

...நகர், அரும்பார்த்தபுரம் பெட்ரோல் பங்க் பின்புறம்
...ட வசதி, சாலை வசதி உட்பட விழுப்புரம் பாண்டி
...ும் அரும்பார்த்தபுரம் உழவர் சந்தை அருகில்
...பின் அளவு 1656 Sq.ft. East facing அரசாங்கத்தால்
...ந்த இடமாக அறிவிக்கப்பட்ட லே அவுட் ரீசர்வே
(Proposed) Government of Pondicherry.
...hority Regd. 8270 Gazette No. 220/PPA/MP/97.
...5 feet Road.
...ஸெட்டி பிளாட்டில் 30 x 60=1800 Sq.ft.North facing.

## ...ம் வெற்றி நகர், கூடப்பாக்கம்

...World(POGO Land) அருகில் 20x60=1200 Sq.ft. அளவுகளில்
...of proposed World trade Centre 3) Within the Reach of Jawahar
...Teacher Training College and Lakshmi Narayan Medical

மனை விற்பனைக்கு
புதுவை,
கொம்பாக்கம்,
சிவகிரி நகர் விரிவு
2 காலி மனைகள்
(3060 Sq.ft.)
விற்பனைக்கு
உள்ளன. அணுகவும்
செல்: 98423 11305
போன்: 0413- 2331125
17/151(1)

விற்பனைக்கு
பாண்டி to கடலூர்
ரோட்டில்
கன்னியகோவில்,

## வீடு/ மனை...

புதுச்சேரி முக்...
வர்த்தகம் செ...
பாரம்பரிய முறை...
வீடு/ மனை...
சொந்தமாக...
தேவைப்...
புரோக்கர்கள் தய...

உ

சகல ஸௌபாக்கியங்களும் தரும்

# ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையும் கதையும்

புலவர். அ.சா. குருசாமி
விஜய்




பதிப்பகத்தார்
ஜெயம் பதிப்பகம்
67, ஏரிக்கரைத் தெரு
சென்னை-600 033

விலை ரூ. 5.50

First Edition May 1995
Second Edition : Novemper '95

# ஸ்ரீ வைபவ் லக்ஷ்மீ
## பதிப்புரை

எல்லா செல்வங்களுக்கும் தலைவியாகத் திகழ்பவள் அன்னை ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஆவாள். அவள் தம் அருள் இன்றி அகிலத்தில் எவரும் இன்புற்று வாழ்ந்திடல் இயலாது. இது யாவரும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்ததேயாகும்.

'இல்லாரை எவரும் வேண்டாள்' என்பது இன்று நடைமுறை உண்மையாகும். பொருட் செல்வத்தை அள்ளித்தரும், கருணைக்கடல் தனலட்சுமியே ஸ்ரீ வைபவ லக்ஷ்மியாக யாவராலும் போற்றி வணங்கப்படுகிறாள்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜை மகத்துவத்தையும், பூஜை முறைகளையும், சுலோகங்களையும், விரத அனுஷ்டான நெறிகளையும், சுலபமான முறையில் விளக்குவதே இச்சிறு நூலின் அடிப்படை நோக்கமாகும். இப்பூஜையைக் கடைப்பிடித்து, பலரும் பயன் அடைந்துள்ளனர். அவற்றில் சிலவற்றையும், இந்நூலில் சேர்த்துள்ளோம்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜையை நீங்களும் கடைப்பிடித்து ஸர்வ மங்களங்களும், அஷ்ட ஐஸ்வர்யங்களும் பெற வேண்டுமென்று அன்னையைப் பிரார்த்தித்தும், ஸ்ரீ காஞ்சி ஆச்சார்ய ஸ்வாமிகளையும் பிரார்த்தித்தும் இந்நூலைப் பணிவுடன் சமர்ப்பிக்கின்றோம்.

- பதிப்பகத்தார் -

Printed at *Thangamani Press*, Chennai-14

☎ 8544048

# ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ வ்ரத பூஜை

ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ ஸர்வ மங்களங்களும் தருபவள். தனலக்ஷ்மியே, வைபவ லக்ஷ்மீ என்று சொன்னால் மிகையாகாது. ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜை எனபது சுமங்கலிகளுக்கு மட்டுமே உரியதாக சிலர் தவறாக கருதுகின்றனர். கைமேல் பலன் அளிக்கக் கூடிய வைபவ லக்ஷ்மீ விரதம் எல்லோருக்கும் உரியது. யோகம், அதிர்ஷ்டம் என்று கூறப்படுவதெல்லாம் ஸ்ரீ அஷ்ட லக்ஷ்மியின் கருணா கடாட்சமே ஆகும்.

சாத்திர நெறிப்படியான ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜைமுறை எளிமை மிக்கதே! ஆயினும், தற்கால நிலையில் அனைவராலும் செய்து வழிபட இயலாத, வசதி, வாய்ப்புகள் இல்லாத எளியோரும் சுலபமாக இந்தப் பூஜையைச் செய்திடலாம்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையில் மடி, ஆசாரம் போன்ற கட்டுப்பாடுகள் எதுவும் கிடையாது. எளிமையான முறையில் ஸ்ரீ மகாலக்ஷ்மி படத்திற்கு மலர், மஞ்சள், குங்குமம் இட்டு விளக்கேற்றி சாம்பிராணி காட்டி, வழிபடுவதே போதுமானது.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மி நான்கு கருணைக் கரங்களுடன் இரண்டு புறங்களிலும் யானைகள் நிற்க, மேற்புறத்தில் தோன்றும் மலர்ந்த தாமரை மலர்களை ஏந்தி வண்ணம் இருந்திட, அடுத்த இரண்டு கரங்களில் வலது வழியாகப் பொற்காசுகளைச் சொறிந்து கொண்டிருக்க, இடது கரம் அபயம் அளித்தபடி இருக்க, பக்திகளின் சங்கேதமாகக் காட்சியளித்து, ஐம்புலன்களையும் ஒருமுகப்படுத்தும் அற்புதமான ஜோதியாக ஐஸ்வர்யங்களை அள்ளி அள்ளித் தந்திடும் அருளாகிய அன்னை வடிவமாகக் காட்சியளிக்கிறார்.

# விரதம் எடுத்துக் கொள்பவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய முறைகள்

ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ வ்ரதத்தை ஓர் நல்ல வெள்ளிக்கிழமை அன்று தொடங்கிபதினொன்று அல்லது இருபத்தோரு வெள்ளிக்கிழமை செய்து வரவேண்டும். இதற்குள் அன்னையின் அருளால், வேண்டிக் கொண்ட காரியம் நிச்சயமாக நிறைவுறும். விரதத்தை சங்கல்பித்துக் கொண்ட, கடைசி வெள்ளிக்கிழமை பூர்த்தி செய்ய வேண்டும். ஒரு வெள்ளிக்கிழமை இடையில் விட்டுப் போனாலும், எட்டு, பதினொன்று அல்லது இருபத்திஒன்று வெள்ளிக்கிழமை மொத்தமாக செய்ய வேண்டும்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையை ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையில் செய்ய வேண்டும். அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்து அன்றாட வேலைகளை முடிக்க வேண்டும். நாள் முழுவதும், மனதை ஸ்ரீ வைபவ லக்ஷ்மியின் பால் செலுத்தி, ''ஜய மாம் லக்ஷ்மீ'' என்ற ஜபத்தை செய்து கொண்டிருக்க வேண்டும்.

காலையில் இருந்து உபவாசம் இருந்து, மாலை பூஜைக்குப் பிறகு ப்ரஸாதத்தை உணவாக, உட்கொள்ளலாம். முடியாதவர்கள் ஒரு வேளை உணவாக அருந்துவது நல்லது.

பூஜை ஆரம்பிப்பதற்கு முன் ''ஜயமாம் லக்ஷ்மி'' என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். குறைந்தது 1008 முறை ஜபித்தல் நல்லது. பூஜையை மாலை விளக்கு வைக்கும் நேரத்தில் துவக்க வேண்டும். அன்றைய தினம், வருட, அயன, ருது, பக்ஷ, வார, திதி, நக்ஷத்திரங்களை பஞ்சாங்கத்தில் பார்த்து அறிந்து ஸங்கல்பத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இப்பூஜையை ஸுமங்கலிகள் சேர்ந்தோ, தனித்தனியாகவோ செய்யலாம். 11, 21, 51, 101 பெண்களாக் சேர்ந்தால் நல்லது. பலர் சேர்ந்து செய்யும்

பொழுது, அவரவர் பூஜா திரவியங்களை அவரவர் கொண்டு வருதல் நல்லது.

## பூஜைக்குத் தேவையான பொருட்கள்

அஷ்ட லக்ஷ்மீ படம், ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ அல்லது அஷ்ட லக்ஷ்மீ யந்திரம், அரிசி, தேன், பஞ்சாம்ருதம், மஞ்சள் பொடி, குங்குமம், சந்தனம், வெற்றிலை, பாக்கு, பழம், புஷ்பம், ஊதுபத்தி, குடம், சாம்பிராணி, கற்பூரம், தேங்காய், நிவேதனத்திற்கு சர்க்கரைப்பொங்கல் அல்லது பாயசம். ஆசன பலகை, வெள்ளி அல்லது செம்பு அல்லது பித்தளை இவற்றில் ஏதாவது ஒன்றினால் செய்த குடம் அல்லது கலசம், அர்ச்சிக்க வெள்ளி, பவுன், அல்லது சாதாரண காசுகள், தூய்மையான தீர்த்தம்.

## பூஜை செய்யும் முறை

சுமங்கலிகள் தனித்தனியாகவோ சேர்ந்தோ பூஜை நடத்தலாம். வீட்டிலுள்ள மற்றவர்களும் உடனிருந்து வழிபடலாம்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மி படம் வைக்கப்பட்டிருக்கும் இடம் அல்லது அலமாரியைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். படம் வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்கு முன்பாக ஆசனப் பலகை ஒன்று போட வேண்டும். அதன் முன்புறம் கோலமிட்டு, அதன்மீது அரிசியைச் சதுரமாகப் பரப்ப வேண்டும். ஏலம், கிராம்பு, கற்பூரம், குங்குமப்பூ ஆகியவற்றைத் தீர்த்தம் நிரம்பிய கலசத்திற்குள் போட்டு, அதன்மேல் சிறு தட்டினை வைத்து, அதன்மேல் நாணயங்களைப் போடுதல் வேண்டும்.

அஷ்டலக்ஷ்மி படம், கலசம், யந்த்ரம் ஆகியவற்றின் மேல் மஞ்சள், சந்தனம், குங்குமம் இட்டு, சிவப்புநிற மலர்களால் அலங்கரிக்க வேண்டும். மஞ்சளைப் பிள்ளையார் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும். கலசத்தின் மேல் ஊதுவத்தி ஏற்றி பூஜை முடிந்ததும் சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியமாக செய்ய வேண்டும்.

பூஜை செய்ய இருப்போர் அதற்கு முன் குளிக்க வேண்டும். அல்லது கை, கால், முகங்களைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். படத்தின் முன்பாக அமர்ந்து, மனதை ஒருமுகப்படுத்தி, முதலில் விக்னேஸ்வர பூஜையைச் செய்தபின் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையைச் செய்ய வேண்டும். அதன் பின்னர் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி வரலாற்றை வாசித்தல் வேண்டும். முடியாதவர்கள் பிறர் வாசிக்கச் சொல்லி கேட்க வேண்டும்.

பிறகு, ஸ்ரீ வைபவ லக்ஷ்மி ஸ்தோத்திரம், அக்ஷ்டலக்ஷ்மி மகாலக்ஷ்மி ஸ்தோத்திரம் முடிந்தவரை ஸ்தோத்திரம் செய்த பிறகு, கலசத்திற்கு ஆரத்தி எடுத்தபின்னர், அஸ்மாத் கும்பாத் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி உத்யாப யாமி'' என்று கூறி அட்சதை மலர்கள் சமர்பணம் செய்து கலசத்தை சிறிது வடக்குப் புறம் நகர்த்தி வைக்கவும்.

பூஜையை முன்னின்று நடத்துபவர் கலச தீர்த்தத்தை தான் சிறிது உண்டு, வந்தவர்கட்கும் வழங்கி, வீடு முழுவதும் தெளிக்க வேண்டும். மீதமுள்ள தீர்த்தத்தை துளசிச் செடியில் ஊற்ற வேண்டும். விரதத்தை பூர்த்தி செய்கின்ற அன்று *8, 11, 21, 51* அல்லது *101* ''ஸ்ரீ வைபவ லக்ஷ்மி வ்ரத பூஜா'' புத்தகத்தை குங்குமமிட்டு, தாம்பூலத்தில் வைத்து கொடுத்து பிரஸாதமும் கொடுக்க வேண்டும்.

பூஜையில் வைத்த நாணயத்தைப் பத்திரப்படுத்த வேண்டும். ஒவ்வொரு பூஜைக்கும் அதே நாணயத்தைப் பயன்படுத்தலாம். அந்தக் காசை செலவழிக்கக் கூடாது. பிரசாதத்தை மற்றவர்களுக்கும் வழங்கித் தானும் உண்ண வேண்டும்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மி விரதத்தை தவறாது கடைப்பிடிப்பவர்களுக்கும், அதில் கலந்து கொண்டவர்களுக்கும் சகல சௌகரியங்களும், செல்வமும் உண்டாகும்: நினைத்த காரியங்கள் கைகூடும். நிம்மதியும், ஆனந்தமும் இல்லத்தில் குடியேறும்.

## ஒவ்வொரு வெள்ளிக்கிழமை பூஜையின் போதும் உச்சரிக்க வேண்டிய ஸ்லோகம்:

யாரக்தாம்புஜ வாசினீ விலாசினீ சண்டாசு தேஜஸ்வினீ
அரக்தாருதிராம்பரா ஹரிசகீ யாஸ்ரீமனோல்லா தினீ!
யா ரத்னாகர மந்தனாத் ப்ரகடிதா விஷ்ணோக்ஷ யா
கேஹிணீ!
சா மாம் பாது மனோ ரமா பகவதீ லக்ஷ்மீஸ்க பத்மாலயா!

### இதன் பொருள்

*ஸ்ரீ லக்ஷ்மீ தேவியானவள் செந்தாமரை மலரினில் புன்னகை காட்டி, கோடி சூரியக் கதிரொளியுடன் விளங்கி, அமர்ந்திருந்து, சிவப்பு நிறப் பட்டாடை உடுத்தி, ஸ்ரீஹரியின் இதயத் தேவியாக அமர்ந்திருந்து, பாற்கடலைக் கடைந்து எடுத்திட்ட வேளையில் உதயமாகி, ஸ்ரீ மகாவிஷ்ணுவின் மனைவியாக விளங்கிடும் அந்த ஸ்ரீபகவதி லட்சுமி தேவி எம்மைக் காத்தருள்வாராக!*

*சுமங்கலிகள் தொடர்ந்து 8, 11, 21 வெள்ளிக் கிழமைகள் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜை செய்து வந்தால் நினைத்த காரியங்கள் சித்தியாகும்.*

## ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜை

*ஸ்ரீ வைபவ லக்ஷ்மீக்குரிய வெள்ளிக்கிழமை விரதம் ஏற்றவர்கள் வெள்ளிக்கிழமை தோறும் ஸ்ரீ வைபவ லக்ஷ்மிக்கு பூஜை செய்யவேண்டும்.*

*ஸ்ரீ விக்னேச்வர பூஜை*

*(முதலில் விக்னேச்வர பூஜையைச் செய்த பிறகு ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜை செய்யவேண்டும்)*

*(பூஜை ஆரம்பிக்குமுன், கால் கைகளை சுத்தம் செய்த பின் ஆசமநம் செய்யவும். கையில் புஷ்பம், அக்ஷதை எடுத்துக் கொண்டு)*

சு'க்லாம் பரதரம் விஷ்ணும் ச'சிவர்ணம் சதுர்புஜம்।
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே॥
என்று சொல்லித் தலையில் குட்டிக் கொள்ளவும்.

**ப்ராணாயாமம்**

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓகும் ஸத்யம், ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: ப்ரசோதயாத், ஓமாப: ஜயோதீரஸ: அம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ்ஸுவரோம்.

**ஸங்கல்பம்**

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச'வர ப்ரீத்யர்த்தம்.

தேதேவ லக்னம் ஸுதினம் ததேவ
தாராபலம் சந்த்ரபலம் ததேவ।
வித்யா பலம் தைவ பலம் ததேவ
ஸ்ரீ லக்ஷ்மீபதே: (அ)ங்க்ரியுகம் ஸ்மராமி॥

கரிஷ்ய மாணஸ்ய கர்மண: நிர்விக்நேந பரிஸமாப்த்யர்த்தம் ஆதௌவிக்னேச்வர பூஜாம் கரிஷ்யே என்று அக்ஷதையை ஸங்கல்ப்பித்து வடக்கே போடவும்.

**மஞ்சள் பிள்ளையார் மீது பூஜிக்கவும்**

கணாநாம்த்வா கணபதிகும் ஹவாமஹே கவிம் கவீநாம் உபமச்'ரவஸ்தமம் ஜ்யேஷ்ட்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்படத ஆந ச்'ருண்வந்நூதிபிஸ் ஸீத ஸாதனம்.

அஸ்மின் ஹரித்ராபிம்பே, ஸுமுகம் மஹாகணபதிம் த்யாயாமி ஆவாஹயாமி என்று சொல்லி மஞ்சள் பிள்ளையார் மீது புஷ்பம் அக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்.

பிறகு உபசார பூஜை

ஸ்ரீ மஹாகணபதயே நம: அர்க்யம் ஸமர்ப்யாமி
ஸ்ரீ மஹாகணபதயே நம: பாத்யம் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ மஹாகணபதயே நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயே நம: ஔபசாரிக ஸ்நானம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயே நம: ஸ்நானான்ந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ மஹாகணபதயே நம: வஸ்த்ரார்த்தம் அஷதான் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயே நம: அலங்கரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ மஹாகணபதயே நம: யஜ்ஞோபவீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ மஹாகணபதயே நம: கந்தான் (சந்தனம்) தாரயாமி *(சந்தனம் இடவும்)*
ஸ்ரீ மஹாகணபதயே நம: கந்தஸ்ய உபரி ஹரித்ராகுங்குமம் ஸமர்ப்பயாமி *(குங்குமம் இடவும்)*

ஸ்ரீ மஹாகணபதயே நம: புஷ்பை: பூஜயாமி:
*(புஷ்பம் அக்ஷதைகளையெடுத்து அர்ச்சிக்கவும்)*

ஓம் ஸுமுகாய நம:
ஓம் ஏகதந்தாய நம:
ஓம் கபிலாய நம:
ஓம் கஜகர்ணகாய நம:
ஓம் லம்போதராய நம:
ஓம் விகடாய நம:
ஓம் விக்ன ராஜாய நம:
ஓம் கணாதிபாய நம:
ஓம் தூமகேதவ நம:
ஓம் கணாத்யக்ஷாய நம:
ஓம் ஃபாலசந்த்ராய நம:
ஓம் கஜாநநாய நம:
ஓம் விக்ரதுண்டாய நம:
ஓம் சூர்ப்பகர்ணாய நம:
ஓம் ஹேரம்பாய நம:
ஓம் ஸகந்தபூர்வஜாய நம:

ஓம் ஸ்ரீ மஹாகணபதயே நம: நாநாவித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி

(பிறகு வெற்றிலை, பாக்கு, பழம் இவைகளை நிவேதனம் செய்யவேண்டும்)

ஸ்ரீ மஹாகணபதயே நம: கதளீஃபலம் நிவேதயாமி (வாழைப்பழம் நிவேதன்ம் செய்யவும்) பூாநீயம் ஸமர்ப்யாமி (உத்தரணியால் தீர்த்தம் எடுத்து கிண்ணத்தில் விடவும்).

வெற்றிலை, பாக்கு மீது ஒரு உத்தரணி தீர்த்தத்தை விடவும். தாம்பூலம் ஸமர்ப்பயாமி (என்று சொல்லி அக்ஷதை போடவும்).

ஸ்ரீ மஹாகணபதயே நம: கற்பூர நீராஜனம் ஸமர்ப்பயாமி (என்று கற்பூரம் காட்டவும்)

ப்ரார்த்தனை

வக்ரதுண்ட மஹாகாய கோடிஸூர்ய ஸமப்ரப।
அவிக்நம் குரு மே தேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா॥

(ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்யவும்)

''ஸ்ரீ மஹா கணபதி ப்ரஸாதம் சி'ரஸா க்ருஹ்ணாமி'' (என்று புஷ்பம் கொஞ்சம் எடுத்து தலையில் வைத்துக் கொண்டு அக்ஷதையை சி'ரஸில் (தலையில்) போட்டுக் கொள்ளவும்.

பிறகு ஸ்ரீ வைபவ லக்ஷ்மீக்கு (கலசத்தில்) பூஜையைச் செய்யவும்.

## ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜை

சு'க்லாம் பரதரம் விஷ்ணும் ச'சி'வர்ணம் சதுர்புஜம்।
ப்ரஸன்ன,வதனம் த்யாயேத் ஸர்வ விக்நோப சா'ந்தயே॥

ப்ராணாயாமம்

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓகும் ஸத்யம், ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹி தியோ யோ ந: ப்ரசோதயாத், ஓமாப: ஜ்யோதீரஸ: அம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ்ஸுவரோம்.

ஸங்கல்பம்

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்'வர ப்ரீத்யர்த்தம் சு'பே சோ'பபேந முஹூர்த்தே ஆத்ய ப்ரஹ்மண த்விதீய பரார்த்தே. ச் வேதவராஹ கல்பே,

வைவஸ்வதமந் வந்தரே, அஷ்டாவிகும்ச'தி தமே கலியுகே. ப்ரதமே பாதே. ஜம்பூத்வீபே. பாரத வர்ஷே. பரதக்கண்டே. மேரோ: தக்ஷிணே பார்ச்வே ச'காப்தே. அஸ்மிந் ஸம்வத்ஸராணாம் மத்யே.... நாம ஸம்வத்ஸரே.... அயநே... ருதௌ.... மாஸே.... பக்ஷே.... யாம் (திதி) சுபதிதௌ ப்ருகு சு'பகரண ஏவங்குண விசே'ஷண விசி'ஷ்டாயாம் அஸ்யாம்... (திதி) சு'பதிதௌ (அவரவர்களுக்கு உரிய ப்ரார்த்தனைகளை வேண்டிக் கொள்ள வேண்டும்) மம சீ'க்ரமேவ விவாஹ ப்ராப்த்யர்த்தம், மம தீர்க்க ஸௌமாங்கல்ய அவாப்த்யர்த்தம், மம பர்த்துச்ச அந்யோந்ய ப்ரீதி புரஸ்ஸரம் அவியோகர்த்தம். ஸத்புத்ர ஸகல ஸௌபாக்ய ஸித்யர்த்தம். லக்ஷ்மீ கடாக்ஷ அனுக்ரஹ ஸித்தியர்த்தம் இஷ்டகாம்யார்த்த ஸித்யர்த்தம் ஸ்ரீ வைபவ லக்ஷ்மிமீ ப்ரீத்யர்த்தம், ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ ப்ராஸத ஸித்யர்த்தம் ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ ப்ரஸாதாத் ஸகல சிந்தித மனோரதாவாப்த்யர்த்தம் ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜாம் கரிஷ்யே (என்று கூறி உத்தரணியால் சிறிது தீர்த்தத்தை எடுத்து கையை துடைத்துக் கொண்டு)

பிறகு ''விக்நேச்வராய நம: யதாஸ்தாநம் ப்ரதிஷ்டா பயாமி''

(என்று சொல்லி அக்ஷதை புஷ்பம் சேர்த்து மஞ்சள் பிள்ளையாரை வடக்கே நகர்த்தவும்)

### கலச பூஜை

பஞ்சாபாத்திரத்தில் தீர்த்தம் நிரப்பி பாத்திரத்திற்கு சந்தனம் குங்குமமிட்டு ஒரு துளசியை தீர்த்தத்தில்போட்டு அதை கையால் மூடிக் கொண்டு,

கலசஸ்ய முகே விஷ்ணு: கண்டே ருத்ரஸமாச் ரித: மூலே:।
தத்ர ஸ்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ருகணா: ஸம்ருதா:॥
குக்ஷௌ து ஸாகராஸ் ஸர்வே ஸப்த த்வீபா வஸுந்தரா:।

ருக்வேதோ(அ)த யஜுர்வேத: ஸாமவேதா(அ)
ப்யதர்வண:॥
அங்கைச்'ச ஸஹிதா: ஸர்வே கலசாம்பு ஸமாச்'ரிதா:।
ஆயாந்து தேவி பூஜார்த்தம் துரிதக்ஷாய காரகா:॥
கங்கே ச யமுநே சைவ கோதாவரீ ஸரஸ்வதீ।
நர்மதே ஸிந்து காவேரீ ஜலே(அ) ஸ்மிந் ஸந்நிதிம் குரு॥

(என்று கூறி துளஸியால் தன்னையும் பூஜா திரவியங்களையும் ப்ரோக்ஷித்துக் கொண்டு)

கண்டா பூஜை

ஆகமார்த்தம் து தேவானாம் கமநார்த்தம் து ரக்ஷஸாம்।
கண்டாரவம் கரோம்யத்ய தேவதாஹ்வாந லாஞ்சநம்॥

(என்று கூறி மணியை அடிக்கவும். பிறகு கையில் புஷ்பம், அக்ஷதை கொஞ்சம் எடுத்துக் கொண்டு)

யாஸா பத்மாசனஸ்தா விபுளகடீகடி பத்ம பத்ராயதாக்ஷீ
கம்பீரா வர்த்தனை நாபிஸ்தன பரநமிதா சுப்ரவஸ்த்
ரோத்தரீயா।
லக்ஷ்மீ தேவ்யைர் கஜேந்திரைர்மணி கணகசிதா வாசிதா
ஹேமகும்பை:।
நித்யம் ஸா பத்மஹஸ்தா மம வசது க்ருஹே சர்வ மாங்கல்ய
யுக்தா॥

ஸரஸிஜ நயனே ஸரோஜ ஹஸ்தே
தவளதராம்சு'க கந்த மால்ய சோ'பே।
பகவதி ஹரிவல்லபே மனோஜ்ஞே
த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்॥

ஸ்ரீ வைபவ லக்ஷ்மியை நம: த்யாயாமி (என்று கூறி புஷ்பாக்ஷதைகளை கும்பத்தில் யந்திரத்தில் ஸமர்ப்பிக்கவும்.)

ஆவாஹயே மஹாலக்ஷ்மீ சைதந்ய ஸ்தந்ய தாயிநி।
விஷ்ணு பத்நி ஜகந் மாத: பூஜாம் க்ருஷ்ணீக்ஷ்வதே நம॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ ஆவஹயாமி (என்று கூறி புஷ்பாக்ஷதைகளை கும்பத்தில் யந்திரத்தில் ஸமர்ப்பிக்கவும்.)*

**கங்கா தீர்த்த ஸமுத்பூதம் கந்த புஷ்பாதிபிர்யுதம்।**
**பாத்யம் ததாம்யஹம் தேவி க்ருஹாணாஸி நமோஸ்துதே॥**

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ பாத்யம் ஸமர்ப்பயாமி (உத்தரணியில் தீர்த்தம் எடுத்து கிண்ணத்தில் ஸமர்ப்பிக்கவும்.)* .

**ஏலாகந்த ஸமாயுக்தம் ஸ்வர்ணபாத்ரே ப்ரபூரிதம்।**
**அர்க்யம் க்ருஹாண மத்தத்தம் ப்ரஸீத த்வம் மஹேஸ்வரி॥**

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ அர்க்யம் ஸமர்ப்பயாமி (உத்தரணியில் தீர்த்தத்தை எடுத்து மூன்று தடவை கிண்ணத்தில் விடவும்.*

**ஸர்வ லோகஸ்ய யா ஸக்திஃ ப்ரஹ்ம ருத்ராமிபிஃ ஸ்துதா।**
**ததாம்யாசமநம் தஸ்யை மஹாலக்ஷ்ம்யை மநோஹரம்॥**

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ ஆசமநீயம் ஸமர்ப்பயாமி (உத்தரணியில் தீர்த்தம் எடுத்து மூன்றுமுறை கிண்ணத்தில் விடவும்)*

**மதுவாதா ருதாயதே மதுக்ஷரந்தி ஸிந்தவ।**
**மாத்வீர் நஸ் ஸந்தவோஷதீ॥**

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி (மூன்று சொட்டு தேன் கிண்ணத்தில் ஸமர்ப்பிக்கவும்)*

**ததிக்ஷீர க்ருதஞ்சைவ ஸர்கரா பல ஸம்யுதம்।**
**பஞ்சாம்ருதம் க்ருஹாணத்வம் லோகாநுக்ரஹ காரிணீ॥**

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ பஞ்சாம்ருத ஸ்நாநம் ஸமர்ப்பயாமி (பஞ்சாம்ருதத்தை அபிஷேகம் செய்வது போல் பாவித்து சிறிதளவு கிண்ணத்தில் ஸமர்ப்பிக்கவும்)*

கங்கா யமுநயோஸ் தோயைঃ ஆநீதம் நிர்மலம் ஸீபம்।
ஸீத்தோதகமிதம் தேவி ஸ்நாநார்த்தம் ப்ரதிக்ருஹ்யதாம்॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ சு'த்தோதகஸ்நானம் ஸமர்ப்பயாமி (தீர்த்தத்தை உத்தரணியில் எடுத்து கிண்ணத்தில் விடவும்)*

திவ்யாம்பரயுகம் ஸீக்ஷ்மம் கஞ்சுகஞ்ச மநோஹரம்।
மஹாலக்ஷ்மீ மஹாதேவி க்ருஹாணேதம் மயார்ப்பிதம்॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (கும்பம் அல்லது யந்திரத்தில் அக்ஷதையை ஸமர்ப்பிக்கவும்)*

கர்பூர சந்தநோபேதம் கஸ்தூரி குங்குமாந்விதம்।
ஸர்வகந்தம் க்ருநாணாத்ய ஸர்வமங்கள தாயிநி॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ கந்தான் தாரயாமி கந்தஸ்ய உபரி ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி (கும்பத்திற்கு சந்தனம் குங்குமம் ஸமர்ப்பிக்கவும்)*

மாங்கல்ய மணி ஸம்யுத்தம் முக்தா வித்ரும ஸம்யுதம்।
தத்தம் மங்கள ஸூத்ரஞ்ச க்ருஹாண ஹரி வல்லபே॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நம மங்கள ஸூத்ரம் ஸமர்ப்பயாமி (மங்கள ஸூத்ரம் ஸமர்ப்பிக்கவும்)*

ரத்ந தாடங்க கேயூர ஹார கங்கண பூஷிதே।
பூக்ஷணாதி மஹார்ஹாணி க்ருஹாண கருணாநிதே॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ ஆபரணாணி ஸமர்ப்பயாமி (வெள்ளி, பவுன் முதலிய ஆபரணங்களை ஸமர்ப்பிக்கவும்) (யதாசக்தி)*

மந்தார பாரிஜாதாப்ஜைঃ கேதக்யுத்பல பாடலைঃ।
மல்லிகா ஜாதிவகுளை புஷ்பைபஸ் த்வாம் பூஜயாம்யஹம்॥
ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ புஷ்பாணி ஸமர்ப்பயாமி

## அங்க பூஜை (புஷ்பங்களால் அர்ச்சிக்கவும்)

ஓம் ஸபலாயை நமஃ பாதெள (பாதம்) பூஜயாமி
ஓம் ஸஞ்சலாயை நமஃ ஜானூ (முழங்கால்) பூஜயாமி
ஓம் கமலயாயை நமஃ கடிம் (இடுப்பு) பூஜயாமி
ஓம் காத்யாயிந்யை நம நாபிம் (நாபி) பூஜயாமி
ஓம் ஜகன் மாத்ரே நமஃ ஜடரம் (வயிறு) பூஜயாமி
ஓம் விஷ்ணு வல்லபாயை நமஃ வக்ஷஃ (மார்பு) பூஜயாமி
ஓம் கமல வாஸிந்யை நமஃ புஜத்வயம் (புஜங்கள் தோள்) பூஜயாமி
ஓம் பத்ம நிலயாயை நமஃ முகம் (முகம்) பூஜயாமி
ஓம் கமலபத்ராக்ஷயை நமஃ நேத்ரத்வயம் (கண்கள்) பூஜயாமி
ஓம் ச்'ரியை நமஃ சிரஃ (சி'ரஸ்) பூஜயாமி
ஓம் ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ ஸர்வாணி அங்கானி பூஜயாமி

## ஸ்ரீ லக்ஷ்மீ அஷ்டோத்தர ச'த நாமாவளி

### (குங்குமத்தால் அர்ச்சிக்கவும்)

ஓம் ப்ரக்ருத்யை நமஃ
ஓம் விக்ருத்யை நமஃ
ஓம் வித்யாயை நமஃ
ஓம் ஸர்வபூதஹித ப்ரதாயை நமஃ
ஓம் ச்'ரத்தாயை நமஃ
ஓம் விபூத்யை நமஃ
ஓம் ஸுரப்யை நமஃ
ஓம் பரமாத்மிகாயை நமஃ
ஓம் வாசே நமஃ
ஓம் பத்மாலயாயை நமஃ 10

ஓம் பத்மாயை நமஃ
ஓம் சு'சயே நமஃ
ஓம் ஸ்வாஹாயை நமஃ
ஓம் ஸுதாயை நம 15

ஓம் தன்யாயை நமஃ
ஓம் ஹிரண்மய்யை நமஃ
ஓம் லக்ஷ்ம்யை நமஃ
ஓம் நித்ய புஷ்டாயை நமஃ
ஓம் விபாவர்யை நமஃ 20

ஓம் அதித்யை நமஃ
ஓம் தித்யை நமஃ
ஓம் தீப்தாயை நமஃ
ஓம் வஸுதாயை நமஃ
ஓம் வஸுதாரிண்யை நமஃ 25

ஓம் கமலாயை நமஃ
ஓம் காந்தாயை நமஃ
ஓம் காமாயை நமஃ
ஓம் க்ஷீரோத ஸம்பவாயை நமஃ
ஓம் அநுக்ரஹ ப்ரதாயை நமஃ 30

ஓம் புத்யை நமஃ
ஓம் அநகாயை நமஃ
ஓம் ஹரிவல்லபாயை நமஃ

ஓம் அசோ'காயை நம:
ஓம் அம்ருதாயை நம: 35
ஓம் தீப்தாயை நம:
ஓம் லோகசோ'க விநாசி'ந்யை நம:
ஓம் தர்ம நிலயாயை நம:
ஓம் கருணாயை நம:
ஓம் லோகமாத்ரே நம: 40
ஓம் பத்ம ப்ரியாயை நம:
ஓம் பத்ம ஹஸ்தாயை நம:
ஓம் பத்மாக்ஷ்யை நம:
ஓம் பத்மஸுந்தர்யை நம:
ஓம் பத்மோத்பவாயை நம: 45
ஓம் பத்மமுக்யை நம:
ஓம் பத்மநாபப்ரியாயை நம:
ஓம் ரமாயை நம:
ஓம் பத்மமாலாதராயை நம:
ஓம் தேவ்யை நம: 50
ஓம் பத்மிந்யை நம:
ஓம் பத்ம கந்தின்யை நம:
ஓம் புண்யகந்தாயை நம:
ஓம் ஸுப்ரஸன்னாயை நம:
ஓம் ப்ரஸாதாபி முக்யை நம: 55
ஓம் ப்ரபாயை நம:
ஓம் சந்த்ர வதநாயை நம:
ஓம் சந்த்ராயை நம:
ஓம் சந்த்ரஸஹோதர்யை நம:
ஓம் சதுர்புஜாயை நம: 60
ஓம் சந்த்ரரூபாயை நம:
ஓம் இந்திராயை நம:
ஓம் இந்து சீ'தளாயை நம:
ஓம் ஆஹ்லாதஜநந்யை நம:
ஓம் புஷ்ட்யை நம: 65
ஓம் சிவாயை நம:
ஓம் சிவகர்யை நம:
ஓம் ஸத்யை நம:
ஓம் விமலாயை நம:
ஓம் விச்'வஜநந்யை நம: 70
ஓம் துஷ்ட்யை நம:
ஓம் தாரித்ர்யநாசி'ந்யை நம:
ஓம் ப்ரீதிபுஷ்கரிண்யை நம:
ஓம் சா'ந்தாயை நம:
ஓம் சு'க்ல மால்யாம்பராயை நம: 75
ஓம் ச்'ரியை நம:
ஓம் பாஸ்கர்யை நம:
ஓம் பில்வ நிலயாயை நம:
ஓம் வராரோஹாயை நம:
ஓம் யச'ஸ்விந்யை நம: 80
ஓம் வஸுந்தராயை நம:
ஓம் உதாராங்காயை நம:
ஓம் ஹரிண்யை நம:
ஓம் ஹேமமாலின்யை நம:
ஓம் தநதாந்யகர்யை நம: 85
ஓம் ஸித்தயே நம:
ஓம் ஸ்த்ரைண ஸௌம்யாயை நம:
ஓம் சு'பப்ரதாயை நம:
ஓம் ந்ருபவேச்'ம கதாநந்தாயை நம:
ஓம் வரலக்ஷ்ம்யை நம: 90
ஓம் வஸுப்ரதாயை நம:
ஓம் சு'பாயை நம:
ஓம் ஹிரண்ய ப்ராகாராயை நம:
ஓம் ஸமுத்ர தநயாயை நம:
ஓம் ஜயாயை நம: 95
ஓம் மங்களாதேவ்யை நம:
ஓம் விஷ்ணுவக்ஷஸ்தல ஸ்த்திதாயை நம:
ஓம் விஷ்ணுபத்ந்யை நம:
ஓம் ப்ரஸன்னாக்ஷ்யை நம:
ஓம் நாராயண ஸமாச்ரிதாயை நம: 100
ஓம் தாரித்ரிய த்வம்ஸின்யை நம:
ஓம் தேவ்யை நம:
ஓம் ஸர்வோபத்ரவ வாரிண்யை நம:
ஓம் நவதுர்காயை நம:
ஓம் மஹாகாள்யை நம: 105
ஓம் ப்ரஹ்ம விஷ்ணு சிவாத்மிகாயை நம:
ஓம் த்ரிகாலஜ்ஞாந ஸம்பந்நாயை நம:
ஓம் ஸ்ரீபுவனேச்'வர்யை நம: 108

அஷ்டோத்தர ச'த நாம குங்குமார்ச்சனான் ஸமர்ப்பயாமி

ஸகல ஸௌபாக்கியங்களும் தரும் பூஜைக்குரிய

# ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ மஹா யந்த்ரம்



ஸகல ஸௌபாக்யங்களும் அருளும்

# ஸ்ரீ வைபவலக்ஷ்மீ பூஜை

## ஸ்ரீ யந்திரம்



பூஜை செய்யும் முன் ஸ்ரீ தேவியை த்யானித்து
இந்த ஐஸ்வர்ய ஸ்ரீ யந்திரத்திற்கு நமஸ்காரம்.
செய்து கொண்டு ஆரம்பிக்கவும்

# ஜயமாம் ஸ்ரீ வைபவலக்ஷ்மி ஐஸ்வர்ய சக்கரம்



இந்த கோலத்தினை ஸ்ரீ வைபவலக்ஷ்மி படத்திற்கு முன் மாவினால் கோலம் போட்டு மத்தியில் குங்குமம் வைத்து சுற்றி மஞ்சளால் கோலம் வரைந்தால் நல்ல பயன் உண்டாகும்.

# ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ விசே'ஷ அர்ச்சனை

குங்குமம் அல்லது மஹாலக்ஷ்மி (வெள்ளி, செம்பு காசுகளினால் அர்ச்சனை செய்யவும். முடியாதவர்கள், ஒரு ரூபாய் காசு, அல்லது 20 பைசா தாமரை காசுகளினால் அர்ச்சிக்கவும்.

மஹா மாயா மஹாதேவீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
மஹாராத்ரீ மஹா காளீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
நித்ய நந்தா நித்ய போதா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
கத்ய பத்யாத்மிகா வாணீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஜம்பிநீ ஜ்ரும்பினீஸீதா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 5

ஸாரணீ சக்ரிகாநந்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
நாராயணீ மஹா தேவீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஹிரண்ய வர்ணரூபா ஹிரண்ய பத ஸம்பவா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
நாத ப்ரஹ்மமயீ நாராயணீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ப்ரஹ்மநாபீ ப்ரம்ம ரூபா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 10

க்ஷீர ரூபே க்ஷீர தாத்ரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
வேத ரூபே நாத ரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ராஜ லக்ஷ்மீ ராஜ்ய லக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
வீர லக்ஷ்மீ விஜய லக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
மந்த்ர ரூபே மூகஹந்த்ரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 15

மஹிஷாஸுர ஸம்ஹர்த்ரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
நிஸ்துலே நிர்மலே நித்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ரத்னரூபே ரத்ன லக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
பதிப்ரியே பதிவ்ரதே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
பக்திப்ரியே பக்திகம்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 20

கீத ரூபே வேத மூர்த்தே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ராக மூர்த்தே சம்பு முத்ரே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸதா பூர்ணே ஸதாரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்வாமிநீ வேதி நீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 25

ஸித்த லக்ஷ்மீ ஸித்த ரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
க்ரியா லக்ஷ்மி மோக்ஷ லக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
பார்வதீ பரமா தேவீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ப்ரத்யங்கிரா தரா வேளா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
லோக மாதா வேதமாதா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 30

தேவ மாதா ஸீரேஸாநா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸாங்கரீ வைஷ்ணவீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸேவ்ய துர்கா குபேராக்ஷீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸாரதா ஸரஸந்தாநா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸமுத்ர வஸநா வாஸா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 35

ஸர்வஜ்ஞ ஸக்திః ஸ்ரீ ஸக்தி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வ தீர்த்த ஸ்த்திதா ஸித்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வ கம்யே ஸர்வ ரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வ ஸந்தோஷ ஸத்ரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
விஷ்ணு ரூபே விஷ்ணு மாயே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 40

ப்ரஹ்மரூபே ப்ராஹ்மனப்ரியே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ராஜ முத்ரே விஷ்ணுமுத்ரே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வார்த்த ஸாதகீ நித்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ரதிரூபே ரம்யரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ரத்னாகர ப்ரபா ரம்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 45

ரக்தா க்ருண்னா ஸிதாபீதா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்ரத்தா மேதா க்ருதி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்தோத்ரப்ரியே ரமேராமே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸித்த லக்ஷ்மீ மஹாவித்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ராமநாமப்ரியே தேவி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 50

கங்கா ப்ரியே ஸ்தோத்ரகம்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
திவ்ய சக்தி மஹாசக்தி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ந்ருத்த ப்ரியே ந்ருத்த ப்ரியே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
காளிகா கர்ஷணீ ஸ்யாமா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
யக்ஷிணி கிந்நரேஸ்வரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 55

ஸ்ரீவித்யா ஸர்வ ஸம்பத்கரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அர்த்த நாரீஸ்வரீ தேவி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
தண்டிநீ முண்டிநீ வ்யாக்ரீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
சிந்தாமணிஸ் சிதாநந்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஏக மாத்ரா த்விமாத்ராச மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 60

அர்த்த மாத்ரா பரா ஸுூக்ஷ்மா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வ லக்ஷ்மீः ஸதாநந்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வஜ்ஞா ஸர்வ ஸக்தீஸ்ச மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஜாலந்தரீ ம்ருடாநீச மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸரஸ்வதீ ஸாஸ்வதாகாரா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 65

காமாங்கீ காமஜனனீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸதாபூர்ணே க்ஷீதாரூபே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
குபேரலக்ஷ்மீ மாதங்கீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஈசான லக்ஷ்மி ஸர்வேசீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்வாஹாகாரா ஸ்வதாகாரா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 70

கம்பீரா கஹநா குஹ்யா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
பரமாத்மிகா பா''நாஸிநீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அர்த்த மாத்ரா அஷ்ட லக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அந்தர்பலா மஹாமாயா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
பார்கவீ பைரவீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 75

பகளா பாலாயை மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
மஹாபூதா மஹா ஸாராயை மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
மஹா பாஹா மதுமதீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
சிவாத்மிகா ஸிவதூதீயை மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்வாஹாயை ஸ்வதாரூபீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 80

அந்தர்பலாரூபீ, ஸ்திராலக்ஷ்மீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அதிதிர் தேவ மாதா ச மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
தேவ துர்கா மஹாதுர்கா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
தேவிகா நந்திகா ஸாந்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸபர்யா குணிநீ பிந்நா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 85

ஸ்வாமிநீ வேதிநீ ஸக்யா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸாரஸீ மாநஸீ ஹம்ஸீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸித்த லக்ஷ்மீர் மஹா காளீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
வாக்வாதிநீ வஸீரூபாச மஹாலஷ்மி நமோஸ்துதே।
வநமாலா வைஜயந்தீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 90

ஸாமகாந ஸமாராத்யா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வகாமா, ஸதாசாரா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸத்யோ வேதவதீ ஸர்வா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸாதுபந்த பதந்யாஸா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸாங்க்யா ஸாங்யவதீ ஸ்வாலா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 95

ஜ்வலந்தீ காமரூபிணீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அவித்யா வாஸநா மாயா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஆக்நேயீ பார்த்திவா ஆப்யா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸர்வ லக்ஷ்மீః ஸதாநந்தா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸார வித்யா ஸதாஸிவா மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 100

ஈசான லக்ஷ்மீ ஸர்வேசீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸித்த லக்ஷ்மீ மஹாவித்யே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அஷ்டலக்ஷ்மீ ஸ்தோத்திரப்ரியே மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
அஷ்டைச்வர்ய ஸ்வரூபிண்யை மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸ்ரீ பார்வதி, ஸரஸ்வதீ மஹாலஷ்மீ நமோஸ்துதே।
காரணீ கார்யரூபிண்யை மஹாலஷ்மி நமோஸ்துதே।
சதுர்புஜே கோமளாங்கீ மஹாலக்ஷ்மி நமோஸ்துதே।
ஸதானந்தமயே தேவி மஹாலக்ஷ்மி நமோஸ்துதே। 108

## உத்தராங்க பூஜை

வநஸ்பதி ரஸோத்பந்தோ கந்தாட்யோ கந்த உத்தமஃ।
ஆக்ரேயஸ் ஸர்வ தேவானாம் தூபோயம் ப்ரதி க்ருஹ்யதாம்॥

*ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமஃ தூபம் ஆக்ராபயாமி*
*(ஊதுபத்தி அல்லது சாம்பிராணி காட்டவும்)*

கற்பூர வர்த்தி ஸம்யுக்தம் க்ருதயுக்தம் மநோஹரம்।
தமோ நாச'கரம் தீபம் க்ருஹாண பரமேச்'வரி॥

ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ தீபம் தர்ச'யாமி (தீபத்தை காட்டவும்)

## பிறகு நைவேத்யம்

சர்க்கரைப் பொங்கல், தேங்காய், வாழைப்பழம், தாம்பூலம் முதலிய நைவேத்ய பதார்த்தங்களை ஒரு உத்தரணீ தீர்த்தத்தால் ப்ரோக்ஷித்து,

நைவேத்யம் க்ருஷ்யதாம் லக்ஷ்மி பக்ஷ்ய போஜ்ய ஸமந்விதம்।
ஷட்ரஸை ரசிதம் திவ்யம் லக்ஷ்மி தேவி நமோஸ்துதே॥

ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ குடான்னம் நாளிகேர கண்டம். கதலீঃபலம், தாம்பூலம் நைவேத்யம் ஸமர்ப்பயாமி, நிவேதனானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி (என்று தீர்த்தத்தை மூன்றுமுறை கிண்ணத்தில் விடவும்)

நீராஜநம் நீரஜாக்ஷீ நாராயண விலாஸிநீ।
க்ருஹ்யதாமர்ப்பிதம் பக்த்யா கருடத்வஜ பாமிநீ॥
ஸ்ரீ வைபவ லக்ஷ்ம்யை நமঃ கற்பூர நீராஜனம் ஸமர்ப்பயாமி

யாநி காநிச பாபாநி ஜன்மாந்தர க்ருதானி ச।
தானி தானி விநச்'யந்தி ப்ரதக்ஷிண பதே பதே॥
ஸர்வ மங்கள லாபாய ஸர்வ பாப நிவ்ருத்தயே।
ப்ரதக்ஷிணம் கரோம்யத்ய ப்ரஸீத பரமேஸ்வரி॥

என்று கூறி ப்ரதிக்ஷிண நமஸ்காரம் செய்யவும். பிறகு ஸ்ரீ வைபவ லக்ஷ்மி கதையைப் படிக்கவும். பிறகு,

யாரக்தாம்புஜ வாசினீ விலாஸினீ சண்டாம்சு தேஜஸ்வினீ।
ஆரக்தா ருதிராம்பரா ஹரிசகீயா ஸ்ரீ மனோஹ்லாதினீ॥
யாரத்னாகர மந்தனாத் ப்ரடிதா விஷ்ணோஸ்சயா கேஷினீ।
ஸாமாம்பாது மனோரமா பகவதீ லக்ஷ்மீஸ்ச பத்மாலயா॥
என்று கூறி ஆரத்தி எடுக்கவும்.

மேற்கண்டவாறு ஆரத்தி எடுத்தபின் ''அஸ்மாத் கும்பாத் ஸ்ரீ வைபவ லக்ஷ்மீம் உத்யாபயாமி'' என்று சொல்லி அக்ஷதை புஷ்பம் ஸமர்ப்பித்து கலசத்தை சிறிது வடக்கு பக்கம் நகர்த்தி வைக்கவும்.

கலச தீர்த்தத்தை தான் சிறிதளவு உட்கொண்டு ப்ரோக்ஷித்துக் கொண்டு வீடு முழுவதும் ப்ரோக்ஷித்து வந்தவர்களுக்கும் தீர்த்தமாகக் கொடுத்து மீதியை துளசிச் செடியிலோ கிணற்றிலோ ஊற்றவும்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மீ பூஜை ஸம்பூர்ணம்.

## ஸுவாஸினி பூஜை

பூஜா புஸ்தகத்தை தாம்பூல தட்சிணைகளுடன் தானமாக வழங்கும்போது, இப்புத்கத்தின் ஒரு பிரதியையும், மஞ்சள், குங்குமம், தாம்பூலம், வளையல், தட்சிணை இவைகளுடன்,

தேவி தேஹி பரக்ஞானம் தேவி தேஹி பரம் சுகம்।
தனம் தேஹி யசோதேஹி ப்ரசீத ஹரிவல்லபே।

என்று கூறி தானம் கொடுக்கவும். இதனால் பூஜையின் பூரண பலன் ஸித்திக்கும்.

---

## வைபவ லக்ஷ்மீ மஹிமா ஸகல காரிய சித்தி ஸ்தோத்திரம்

பத்ரகாளீ கராளீச மஹாகாளீ திலோத்தமா।
காளீகராள வக்த்ராந்தா காமாக்ஷீ காமதா ஸீபா॥

மஹாலக்ஷ்மீர் மஹாகாளீ மஹாகந்யா ஸரஸ்வதீ।
போக வைபவ ஸந்தாத்ரீ பக்தாநுக்ரஹ காரிணீ॥

ஜயா ச விஜயா சைவ ஜயந்தீ சாபராஜிதா।
குப்ஜீகா காளிகா ஸாஸ்த்ரீ வீணா புஸ்தகதாரிணீ॥

பிப்பலா ச விஸாலாக்ஷீ ரக்ஷோக்நீ வ்ருஷ்டி காரிணி।
துஷ்ட வித்ராவிணீ தேவீ ஸர்வோபத்ரவ நாஸிநீ॥

அர்த்தநாரீஸ்வரீ தேவீ ஸர்வவித்யா ப்ரதாயிநீ।
பார்கவீ பூஜாஷீ வித்யா ஸர்வோப நிஷ தாஸ்திதா॥

கேதகீ மல்லிகா ஸோகா வாராஹீ தரணீ த்ருவா।
நாரஸிம்ஹீ மஹோக்ராஸ்யா பக்தாநா மார்த்திநாஸிநி॥

கைவல்ய பதவீ புண்யா கைவல்ய ஜ்ஞாந லக்ஷிதா।
ப்ரஹ்ம ஸம்பத்தி ரூபா ச ப்ரஹ்ம ஸம்பத்தி காரிணீ॥

ஸர்வமங்கள ஸம்பந்நா ஸாக்ஷாத் மங்கள தேவதா।
தேஹி ஹ்ருத்தீபிகா தீப்தி: ஜிஷ்ம பாப ப்ரணாஸினீ॥
க்ஷீத்ரஜந்து பயக்நீ ச விஷரோகாதி பஞ்ஜநீ।
ஸதா ஸாந்தா ஸதா ஸீத்தா க்ருஷத்சித்ர நிவாரிணீ॥
மங்களம் மங்களாநாம் த்வம் தேவதாநாம் ச தேவதா।
த்வமுத்த மோத்தமாநாம் ச த்வம் ஸ்ரேய: பரமாம்ருதம்॥
தநதாந்யாபி விருத்திஸ்ச ஸார்வபௌம ஸீகோச்ரயா:।
ஆந்தோளிகாதி ஸௌபாக்யம் மத்தேபாதி மஹோதய:॥
புத்ர பௌத்ராபி வ்ருத்திஸ்ச வித்யா போக பலாதிகம்।
ஆயுராரோக்ய ஸம்பத்தி: அஷ்டஐஸ்வர்யம் த்வமேவஹி।
தேவி தேஹி தனம், தேவி தேஹிய சோமயி।
கீர்த்திம் தேஹி, சுகம் தேஹி, ப்ரசீத ஹரி வல்லபே॥

## ஸ்ரீ அஷ்டலக்ஷ்மீ ஸ்தோத்ரம்

### *1. ஆதிலக்ஷ்மி*

ஸுமனஸ வந்தித ஸுந்தரி மாதவி
சந்தர ஸஹோதரி ஹேமமயே
முநிகண மண்டித மோக்ஷ ப்ரதாயினி
மஞ்ஜுள பாஷிணி வேதநுதே।
பங்கஜ வாஸினி தேவஸுபூஜித
ஸத்குண வர்ஷிணி சா'ந்தியுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
ஆதிலக்ஷ்மி ஸதா பாலய மாம்॥

### *2. தான்யலக்ஷ்மி*

அயிகலி கல்மஷ நாசி'னி காமிநி
வைதிக ரூபிணி வேதமயே
க்ஷீரஸமுத்பவ மங்கள ரூபிணி
மந்த்ர நிவாஸிநி மந்த்ரநுதே।
மங்கள தாயினி அம்புஜ வாஸிநி
தேவ கணாச்'ரித பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
தான்யலக்ஷ்மீ ஸதா பாலய மாம்॥

### 3. தைர்யலக்ஷ்மி

ஜய வர வர்ணிநி வைஷ்ணவி பார்கவி
மந்த்ர ஸ்வரூபிணி மந்த்ரமயே
ஸுரகண பூஜித சீ’கர ஃபலப்ரத
ஜ்ஞான விகாஸிநி சா’ஸ்த்ரநுதே।
பவபய ஹாரிணி பாப விமோசநி
ஸாது ஜநாச்’ரித பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
தைர்யலக்ஷ்மி ஸதா பாலய மாம்॥

### 4. கஜலக்ஷ்மி

ஜய ஜய துர்கதிநாசி’னி காமிநி
ஸர்வ ஃபலப்ரத சா’ஸ்த்ரமயே
ரத கஜ துரக பதாதி ஸமாவ்ருத
பரிஜன மண்டித லோகனுதே।
ஹரி ஹர ப்ரஹ்ம ஸுபூஜித ஸேவித
தாப நிவாரணி பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
கஜலக்ஷ்மி ரூபேண பாலய மாம்॥

### 5. ஸந்தானலக்ஷ்மி

அயி கக வாஹிநி மோஹிநி சக்ரிணி
ராக விவர்த்தினி ஞானமயே
குண கண வாரிதி லோக ஹிதைஷிணி
ஸ்வரஸப்த பூஷித கானனுதே।
ஸகல ஸுராஸுர தேவ முநீச்’வர
மாநவ வந்தித பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
ஸந்தானலக்ஷ்மி ஸதா பாலய மாம்॥

### 6. விஜயலக்ஷ்மி

ஜய கமலாஸநி ஸத்கதி தாயிநி
ஜ்ஞான விகாஸினி கானமயே
அனுதினமர்ச்சித குங்குமதூஸர
பூஷித வாஸித வாத்யனுதே।
கனகதரா ஸ்துதிவைபவ வந்தித
ச’ங்கர தேசி’க மான்யபதே

ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
விஜயலக்ஷ்மி ஸதா பாலய மாம்॥

### 7. வித்யாலக்ஷ்மி

ப்ரணத ஸுரேச்'வரி பாரதி பார்கவி
சோ'கவிநாசி'நி ரத்னமயே
மணிமய பூஷித கர்ணவிபூஷண
சா'ந்தி ஸமாவ்ருத ஹாஸ்யமுகே।
நவநிதி தாயிநி கலிமல ஹாரிணி
காமித ஃபலப்ரத ஹஸ்தயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
வித்யாலக்ஷ்மி ஸதா பாலய மாம்॥

### 8. தனலக்ஷ்மி

திமி திமி திந்திமி திந்திமி திந்திமி
துந்துபி நாத ஸுபூர்ணமயே
கும கும கும்கும கும்கும கும்கும
ச'ங்க நிநாத ஸுவாத்யநுதே।
வேத புராணேதிஹாஸ ஸுபூஜித
வைதிக மார்க ப்ரதர்ச'யுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி
தனலக்ஷ்மி ரூபேண பாலய மாம்॥

அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்

## ஸ்ரீ மஹாலக்ஷ்மியஷ்டகம்
## ஸ்ரீ இந்த்ர உவாச

நமஸ்தே(அ)ஸ்து மஹாமாயே ஸ்ரீ பீடே ஸுரபூஜிதே।
ச'ங்க சக்ர கதாஹஸ்தே மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 1

நமஸ்தே கருடாரூடே கோலாஸுர பயங்கரி।
ஸர்வ பாப ஹரே தேவி மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 2

ஸர்வஜ்ஞே ஸர்வவரதே ஸர்வதுஷ்ட பயங்கரி।
ஸர்வ து:கஹரே தேவி மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 3

ஸித்தி புத்திப்ரதே தேவி புக்தி முக்தி ப்ரதாயினி।
மந்த்ரமூர்த்தே ஸதாதேவி மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 4

ஆத்யந்த ரஹிதே தேவி ஆதிச'க்தி மஹேச்'வரி।
யோகஜ்ஞே யோகஸம்பூதே மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 5

ஸ்தூலஸூக்ஷ்ம மஹாரௌத்ரே மஹாச'க்தி மஹோதரே।
மஹா பாபஹரே தேவி மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 6

பத்மாஸன ஸ்த்திதே தேவி பரப்ரஹ்ம ஸ்வரூபிணி।
பரமேசி' ஜகந்மாதா: மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 7

ச்'வேதாம்பரதரே தேவி நானாலங்கார பூஷிதே।
ஜகத்ஸ்த்திதே ஜகந்மாத: மஹாலக்ஷ்மி நமோ(அ)ஸ்துதே॥ 8

மஹாலக்ஷ்ம்யஷ்டகம் ஸ்தோத்ரம் ய: படேத் பக்திமான் நர:।
ஸர்வஸித்தி மவாப்னோதி ராஜ்யம் ப்ராப்னோதி ஸர்வதா॥ 9

ஏக்காலே படேந் நித்யம் மஹாபாப விநாச'னம்।
த்விகாலம் ய: படேந் நித்யம் தனதான்ய ஸமந்வித:॥ 10

த்ரிகாலம் ய: படேந் நித்யம் மஹாச'த்ரு விநாச'னம்।
மஹாலக்ஷ்மீர் பவேந் நித்யம் ப்ரஸன்னா வரதா சு'பா॥ 11

ஸ்ரீ மஹாலக்ஷ்ம்யஷ்டகம் ஸம்பூர்ணம்

## ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜா கதை

ஐசுவரிய தேவதையான வைபவ லக்ஷ்மி சிரத்தை மற்றும் அசையாத நம்பிக்கைகளால் தன்னைப் பூஜிக்கும் பக்தர்களுக்கு தவறாமல் அருள் செய்கிறாள். அநேகமான பக்தர்கள் இந்தப்பூஜா முறையின் பிரபாவத்தினால் பொருள் நெருக்கடியிலிருந்து மீளப்பெற்று, நிம்மதியான வாழ்வைப் பெற்றுள்ளார்கள்.

மகாலக்ஷ்மி நாமம், ரமா, வித்யா, ஸ்ரீவரத ஹரிவல்லபா, லக்ஷ்மி ஸமுத்திரதனயா, கருடவாஹினி, ப்ரம்மஜனனி, சம்பத் பிரதாயினி, ஸ்ரீ சக்ர வாசினி, மகாப்ரக்ருதி ஸ்வரூபிணி முதலான புண்ணிய நாமங்களின் வாயிலாக புராணங்களில் போற்றப்படுகிறது. ஸ்ரீ சூக்தத்தில் ஸ்ரீமன் மகாலக்ஷ்மியை ஹிரண்ய வர்ண ஹரிணி சுவர்ண ரஜத ஸ்ரதா என்று வர்ணிக்கப்படுகிறது. சுவர்ண, ரஜத, ஸ்ரதா என்றால் பொன்மாலையணிந்து மகாபாவங்களை அழித்தொழித்து, பொன், வெள்ளியாலான அமூல்ய ஆபரணங்களை அணிந்து, ஸ்ரீ பூ துர்கா சொரூபியான சந்த்துவ, ரஜஸ், தமங்களுக்கு அபிமானியாகிய மகா மாதாவென்று வேதங்கள் லக்ஷ்மி தேவியைப் பாடிப் புகழ்கின்றன.

ருக்வேதம், யஜுர்வேதம், சாமவேதங்களில் லக்ஷ்மிதேவியை ஸ்தவன ரூபமான சூக்தங்களால் பாடப்படுகின்றன - அதர்வண வேதத்தில் லக்ஷ்மிரகசியம் நிரூபிக்கப்பட்டு, அதர்வண

ரகசியத்தில் அதிக பிரபலமான லக்ஷ்மி இருதயம் உபதேசிக்கப்படுகிறது - பத்ம புராணம், விஷ்ணுபுராணம், ஸ்ரீமத் பாகவதம் முதலான மகா புராணங்களில் ஜகன் மாதாவின் மகா விசேஷங்கள் மிகச் சிறப்பாக வர்ணிக்கப்படுகிறது.

கிருத, திரேதா, துவாபர யுகங்களில் தேவாதி தேவர்களாலும், காசிபர், அத்திரி, அகஸ்தியர் முதலான ரிஷி தபஸ்விகளாலும், அர்ச்சிக்கப்பட்ட மகாலக்ஷ்மியானவள் யுகயுகமாக நம்பிய பக்தர்களுக்கு பலவித சம்பத்துகளையும் கருணித்து வருகிறாள். கலியுகத்தில் ஞானம், யக்ஞம், தபஸ்களை விட நாமஸ்மரணைக்கு பிரதான இடமுண்டென்று ஞானிகள் கூறியிருப்பதால் மகா லக்ஷ்மியின் நாமஸ்மரணை செய்து வந்தால் யதாசக்தியுடனும் சிரத்தை பக்தியுடனும் எளிய முறையிலாவது தேவியின் பூஜை செய்து வழிபட்டால் வைபவ லக்ஷ்மியின் நல்லருளைப் பெறுவோம் என்பதில் சந்தேகமில்லை.

## ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜா மஹிமா

அன்பும் அறமும் கொண்டு நல்ல நிறைவுடன் வாழ்ந்து வந்தது ஹேமாவின் குடும்பம். அழகான குழந்தைகள் இருவர் அவர்களுக்கு. கணவன் ரமேஷ் கை நிறைய நல்ல சம்பளத்துடன், ஒரு அலுவலகத்தில் உத்தியோகம் பார்த்து வந்தான். நல்ல முறையில், ஓடிக்கொண்டிருந்தது அவர்கள் குடும்பம்.

அந்த நல்ல குடும்பத்தின் அமைதியை கெடுப்பதுபோல் சோதனை அந்த குடும்பத்தை அலைக்கழிக்க ஆரம்பித்தது. யாரோ, ஒருவர், அலுவலக பணத்தை கையாடல் செய்ய அந்தப் பழி கணவன்மீது வந்து விழ, பார்த்துக்கொண்டிருந்த உத்தியோகம் பறிபோயிற்று. இந்த துயரத்தால் கணவன் மனம் வருந்தி, கலங்கி குடும்பத்தை கவனிக்காமல் மனம்போன போக்கில் திரிய ஆரம்பித்தான்.

இந்த துயரத்தில் மேலும் ஒரு அதிர்ச்சி அவளுக்கு. அவளது மகன் அரவிந்த் வேறு காணாமல் போய்விட்டான். எங்கெங்கு தேடியும் கிடைக்கவில்லை. உரிய காலத்தில் மகளுக்கும் திருமணம் செய்துவைக்க இயலாமல் தவித்தாள். அந்த வீட்டில் சோகமே குடிகொண்டிருந்தது.

இப்படி இருக்கும்போது ஒருநாள் நீண்ட நாட்களுக்குப் பின் சந்தித்த தன் பால்ய சிநேகிதியிடம் தன் துயர நிலையை சொல்லி அழுதாள். தோழியின் நிலைகண்டு வருந்திய ஆஷா, ஹேமாவை தேற்றி, ஸ்ரீவைபவ லக்ஷ்மி விரத பூஜை புத்தகம் ஒன்றை கொடுத்து, ''இப்புத்தகத்தில் கூறியுள்ளபடி ஒவ்வொரு

வெள்ளிக்கிழமையும் பூஜை செய்து வந்தால் உன் துன்பமெல்லாம் நீங்கும். நல்ல காலம் பிறக்கும். பிரிந்த கணவன் கூடுவான். கைவிட்டுப் போன செல்வம் கிடைக்கும். நினைத்த காரியம் கைகூடும்'' என்று கூறிச் சென்றாள். அதன்படி வெள்ளிக்கிழமை தோறும் குளித்து முடித்து ஹேமாவும் மகள் பவித்ராவும் பக்தியுடன் முறைப்படி ஸ்ரீவைபவ லக்ஷ்மி பூஜை செய்து வந்தனர்.

என்ன ஆச்சரியம்! இரண்டாவது வாரம் கணவன் வந்து சேர்ந்து, ''பட்ட பழி நீங்கியது! கையாடல் செய்தவன் பிடிபட்டான். அனைவருக்கும் உண்மை விளங்கியது. போன வேலை திரும்ப கிடைத்தது. இனி நிம்மதியுடன் இருப்போம்!'' என்று மகிழ்ச்சியுடன் கூற, ஹேமாவும் வைபவ லக்ஷ்மியின் மகிமையை எண்ணி வியந்து போற்றி, விரதத்தை கணவனுடன் தொடர்ந்து செய்து வந்தாள்.

எட்டாவது வெள்ளிக்கிழமை பூஜை. பூஜை முடிவதற்கு முன்பே அதிர்ஷ்டம் ஹேமாவின் வீட்டின் கதவை மீண்டும் ஒருமுறை தட்டியது.

ஆம் வீட்டு வாசலில் மகன் அரவிந்த் டிப்டாப்பாக நின்று கொண்டிருந்தான். மூன்றாண்டுகளுக்கு முன்பு காணாமல் போனவன். வெளிநாட்டில் சம்பாதித்து, நிறைந்த வசதியுடன் வந்து சேர்ந்தான். ஹேமாவின் விரத பூஜை வீண் போகவில்லை. ஒரு நல்ல தினத்தில் மகளின் திருமணமும் வைபவ லக்ஷ்மியின் அருளால் மிகச் சீரும் சிறப்புமாக நடந்தது. வைபவ லக்ஷ்மியின் அருளை வியந்து போறற்றி, அக்குடும்பம் இன்று எல்லா சௌபாக்கியங்களுடன் மங்களூருக்கு அருகில் வாழ்ந்து வருகிறது.

ஜய ஜய வைபவ லக்ஷ்மி
வைபவ லக்ஷ்மிக்கு சுபமங்களம்

## ஸ்ரீ வைபவ லக்ஷ்மி விரத பூஜை வரலாறு

இலட்சோப லட்சம் குடும்பங்கள் வாழும் பம்பாய் நகரில் நன்னெறியுடன் வாழ்ந்து வரும் குடும்பங்களில் ஒன்று சாந்தா தேவியின் குடும்பம். அன்பும் அறமும் பண்பும் பக்தியும் சத்தியமும் கொண்ட அவளைப் போலவே எல்லா நற்குணங்களும் பெற்றவன் அவளது கணவன் துளசிதாஸ். சகல சௌபாக்கியங்களும் பெற்று ஆனந்தமாக வாழ்ந்தது ந்தக் குடும்பம். அன்னை ஸ்ரீ மகாலக்ஷ்மியின் பால் அளவிடற்கரிய

பக்தி கொண்டவர்கள். வீட்டில் தவறாமல் பூஜை செய்வதுடன், ஸ்ரீ மகாலக்ஷ்மி கோவிலுக்கும் சென்று வணங்கி வழிபட்டு வரக்கூடியவர்கள்.

நேர்மையான உழைப்பால் செல்வம் அந்த இல்லத்தில் வந்து குவிந்தது. கருணையும், சுபிட்சமும் நிறைந்து துன்பமென்றால் என்னவென்றே அறியாத நிலையில், ஆனந்த சாகரத்தில் திளைத்தது அந்தக் குடும்பம். அந்த உன்னதமான குடும்பம் நகரில் தனித்த மதிப்பும், மரியாதையும் பெற்று விளங்கியது.

இத்தகைய நல்லறம் பொங்கி வழிந்த துளசிதாஸ் சாந்தாதேவி குடும்பத்தின் மேல் யாருடைய கொள்ளிக்கண் பட்டதோ! தென்றல் தழுவிய அக்குடும்பத்தில் மெல்ல மெல்லப் புயல் வீசத் தொடங்கியது. துளசிதாஸ் வேண்டாதவர்களின் தொடர்பால் படிப்படியாக தனது இயல்பான நற்குணங்களிலிருந்து விலகத் தொடங்கினான். மது அரக்கனின் வலையில் சிக்கினான். சூதாட்ட வெறியனாக மாறினான். இதுவரை சாந்தி தவழ்ந்த அந்தக் குடும்பம் முற்றிலும் அமைதி இழந்தது. தொழிலில் கவனம் செலுத்துவதை துளசிதாஸ் அடியோடு மறந்தான். செல்வம் கரைந்தது. மூதேவி குடியேற ஆரம்பித்தாள். துன்ப இருள் சூழ்ந்தது.

சாந்தா தேவி கணவன் திசைமாறி, அலைவதைக் கண்டு அதிர்ச்சிக்குள்ளானாள். விதி தனது வாழ்வில் பயங்கரமாக விளையாடுவது கண்டு கதறியழுதாள். அன்னை ஸ்ரீதேவியின் அருள் நம்மை விட்டு விலகிவிட்டதோ! யாருக்கும் எந்தத் தீங்கும் நினைக்காத எனக்கு ஏன் இப்படி ஒரு சோதனை?'' என எண்ணியெண்ணிக் கண்ணீர் வடித்தாள். கணவனின் தவறான போக்கைச் சுட்டிக்காட்டித் திருத்திட பெருமுயற்சி எடுத்துக் கொண்டாள். ஆனால் செவிடன் காதில் ஊதிய சங்காய் பயனற்றுப் போனது. தொழிலும் அவனை அடியோடு கைவிட்டுப் போய்விட்டது. நகை மற்றும் வீட்டில் உள்ள பொருள்கள் யாவற்றையும் ஒவ்வொன்றாக விற்றுத் தீர்த்தான்.

துன்பங்கள் தொடர்ந்து வந்து மோதி அலைக்கழித்தாலும் மீண்டும் நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கை மட்டும் சாந்தா தேவியை விட்டு அகலவில்லை. வாழ்ந்து கெட்டு மற்றவர்களின் நகைப்பிற்கும் ஏளனத்திற்கும் உள்ளாகி நொந்து போன அவள் வெளியில் தலை காட்டவே மனம் கூசினாள். அன்னை ஸ்ரீ மகாலக்ஷ்மி கோவிலுக்கும் அவள் செல்ல இயலாத நிலையில் துவண்டு போனாள்.

கோவிலுக்குச் செல்ல இயலாத நிலையில், தனது வீட்டிலேயே ஸ்ரீ மகாலக்ஷ்மி பூஜையைத் தவறாமல் செய்து வந்தாள். தன் நிலையை துன்ப பாரத்தை அன்னையிடம் எடுத்து வைத்தாள். அன்னையின் கடாட்சம் மீண்டும் கிடைக்கும் என்று உறுதியாக நம்பினாள். எந்த நிலையில் எதைக் கைவிட்டாலும், பக்தியை மட்டும் அவள் கைவிடவே இல்லை. அன்னை ஸ்ரீ வைபவ லக்ஷ்மியிடம் மனச்சுமைகளை இறக்கி வைத்துவிட்டு, குடும்பத்தைக் கஷ்டப்பட்டு நடத்தி வந்தாள்.

ஒருநாள் களைப்பும் வேதனையும் சாந்தா தேவியை முற்றுகையிட படுக்கையில் கண் அயர்ந்தாள் -

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டுத் துள்ளியெழுந்தாள். கருணையும் அன்பும் குடியேறிய அருள் முகத்துடன் ஒரு மூதாட்டி நிற்பதைக் கண்டு சில விநாடிகள் சாந்தா தேவி மெய்மறந்து போனாள். சாட்சாத் ஸ்ரீ வைபவ லட்சுமியே தனது இல்லத்தைத் தேடிவந்து விட்டாரோ! என வியப்புடன் அந்த அன்னையை வரவேற்று இருக்கையில் அமர வைத்தாள். பால் தந்து உபசரித்தாள். அவள் மனதில் திடீரென்று புதிய ஒளி. ஏதோ ஒரு மாற்றம் வரப்போகிறது என்ற உணர்வு ஏற்பட்டது. தன்னைக் காக்க வந்த தெய்வமாகவே அந்த அன்னையைக் கருதி, தனக்க ஏற்பட்ட சோதனைகளையெல்லாம் எடுத்து வைத்தாள். அருள் பொங்கக் கேட்ட அந்த அன்னை வலது கையால் ஆசீர்வதித்தார்.

அந்த அன்னையை இதுவரை கண்டதே இல்லையே என நினைவு கூர்ந்தாள்.

''பெண்ணே! நீ அடிக்கடி என்னைப் பார்த்திருக்கிறாய். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஸ்ரீ மகாலக்ஷ்மி கோயிலுக்கு நீ தவறாமல் வருவாய். நான் உன்னை அங்கு பார்த்திருக்கிறேன். உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். சில நாட்களாக உன்னை கோவிலில் காண முடியாததால் உன்னைக் காண இங்கு வந்தேன்'' என்றார் கருணையே வடிவான அந்த அன்னையார்.

''கணவன் பாதை மாறிச் சென்றுவிட்டான்... ஐசுவரியங்கள் எல்லாம் எங்களை விட்டுப் போய்விட்டன. வெளியில் தலை காட்ட இயலாத அளவிற்கு வறுமை. அதனால், நான் வீட்டை விட்டு வெளியேற இயலவில்லை. எப்படியும் அன்னை ஸ்ரீமகாலக்ஷ்மி காப்பாற்றுவாள் என்ற நம்பிக்கையுடன் வீட்டிலேயே பூஜை செய்து வருகிறேன்...'' என்று கண்ணீர் மல்கக் கூறினாள் சாந்தாதேவி.

அருள் ஒளி பாய்ச்சும் கருணைப் பார்வையுடன் அந்த அம்மையார் சாந்தா தேவியின் கண்ணீரைத் துடைத்து முதுகில் தட்டிக் கொடுத்தவுடன் ஒரு புத்துணர்வு தனது உள்ளத்தில் ஏற்படுவதை உணர்ந்தாள்.

''சாந்தா... கவலையை விடு... இருள் சூழ்ந்தால் மீண்டும் வெளிச்சம் வந்தே தீரும். உலக வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். இது இயற்கையின் நியதி. துன்பம் ஏற்படும்போது மனம் தளராமல் இறைவனிடம் உன் பாரத்தைப் போட்டுவிட்டு, வழிபாடு செய்வதை மட்டும் தொடர்ந்திடு. எப்போதும் செய்து வந்த ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையை இன்னும் நீ சிறப்புடன் செய்திட வேண்டும்'' என்றார் அந்த அன்னையார். நான் எப்படி அந்த பூஜையைச் செய்ய வேண்டும் என்பதை எனக்கு விளக்கமாகக் கூறி, என்னை ஆசீர்வதிக்க வேண்டும்'' எனக்கூறி அந்த அம்மையின் பாதங்களைத் தொட்டு வணங்கினாள் சாந்தா தேவி. அவளை அருளோடு அரவணைத்த அன்னையார் பூஜை செய்வதைப் பற்றி மிக விளக்கமாக எடுத்துக் கூறினார்.

''ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையும், பஜனையும் நடத்த வேண்டும். எட்டு முதல் இருபத்தியொரு வாரங்களில் எத்தனை வாரங்கள் என்பதை நீயே மனதில் முடிவு செய்துகொள்ள வேண்டும். அதன்படி அந்த விரதத்தை முழுநம்பிக்கையுடன் நிறைவேற்ற வேண்டும். (அன்னையார் கூறிய பூஜை முறைகள் இந்நூலில் முதலில் தெரிவிக்கப்பட்டுள்ளது.)

இப்படி முறையாக ஸ்ரீ வைபவ லக்ஷ்மியை பூஜித்து தான் இன்புறுவதுடன் மற்றவர்களையும் இதில் கலந்துகொண்டு மகிழச் செய்தால், அன்னை அகமகிழ்ந்து அனைவருக்கும் அருள்மழை பொழிவாள். மேலும் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜை செய்யும் முறையும் வரலாறும் கொண்ட புத்தகத்தை விரதத்தை நிறைவு செய்யும் நாளன்று உன்னால் முடிந்த எண்ணிக்கையில் புத்தகத்தை வாங்கி, (8, 11, 21, 51, 101 என்ற வகையில்) அதில் குங்குமம் தடவி, தாம்பூலத் தட்டில் வைத்து பூஜைக்கு வந்த ஒவ்வொருவருக்கும் கொடுக்க வேண்டும்.'' இவ்வாறு கூறியதும் அந்த அன்னையைக் காணவில்லை.

திடுக்கிட்டு விழித்த சாந்தா தேவி, இதுவரை ஸ்ரீ வைபவலக்ஷ்மிதான் தன் கனவில் தோன்றி, அருளுரை வழங்கியது என்பதை உணர்ந்து பேரின்பம் கொண்டாள்.

அதன்படி சாந்தா தேவி புதிய உற்சாகத்துடன் ஒவ்வொரு வெள்ளியும் ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையை சிறப்புடன் செய்து வந்தாள்.

என்னே வியப்பு!

சில நாட்களில் சாந்தா தேவியின் கணவன் தன் தவறுகளை உணர ஆரம்பித்தான். தன் இந்த நிலைக்கான காரணங்களை எண்ணிப் பார்த்தான். கடந்த காலத் தவறுகளுக்காகக் கண்ணீர் சிந்தினான். வாழ்வில் பட்டு உழன்ற படிப்பினைகளை எண்ணிப் பார்த்தான். தீயவர் நட்பு தனது வசதி வாய்ப்பு கரைந்ததும் அவனை விட்டு விலகிப் போனதை நினைவு கூர்ந்தான்.

எந்தத் துன்ப நிலையிலும் தனக்காக வாழும் தன் மனைவியின் தூய அன்பை எண்ணி வியந்தான். நடந்த சம்பவங்களை நினைவு கூர்ந்து துளசிதாஸ் கண் கலங்கியபோது, சாந்தா தேவி ஆறுதல் கூறினாள். தன் அன்பு அரவணைப்பால், புதிய தெம்பை அவனுக்கு ஊட்டினாள். அவளது பூஜையும் விரதமும் நம்பிக்கையும் அவர்களுக்குக் கை கொடுத்தது. மீண்டும் பண்புடைய உழைப்பாளி துளசிதாஸாக மாறினான். வறுமை அவர்களை விட்டு வெகுண்டோடியது. அமைதி அந்த இல்லத்தை நாடி வந்தது. மகிழ்ச்சியும் குதூகலமும் மீண்டும் முற்றுகையிட்டன.

சாந்தா தேவியின் பக்தியையும், அவளுக்கு ஏற்பட்ட நன்மைகளையும் அறிந்த அண்டை வீட்டாரும் அவளைப் போலவே முறைப்படி ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜை செய்ய ஆரம்பித்தனர். அந்த நகர் முழுவதுமே சுபிட்சம் குடியேற ஆரம்பித்தது.

இன்னும் என்ன சந்தேகம்! நீங்களும் தொடர்ந்து ஸ்ரீ வைபவ லக்ஷ்மி பூஜையைத் தொடங்குங்கள். அன்னையின் அருள் நிச்சயம் கிடைக்கும்.

ஸ்ரீ வைபவ லக்ஷ்மிக்கு சுப மங்களம்

